கள் தெய்வமே.'' என்று உபசரித்தாள் கங்கா தேவி.

பீமதேவன் கண்கள் சுற்றுமுற்றும் பார்த்து ஏதோ கேட்பதை உணர்ந்த கங்கா தேவி "சௌளா உடை மாற்றப் போயிருக்கிறாள். இதோ வந்துவிடுவாள்'' என்றாள்.

சௌளாவும் அறையிலிருந்தபடியே வாயில் வழியாகச் சண்டைக்குத் தயாராய் ருத்திர பகவானைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தாள். அவள் தேவதுந்துபி முழங்குவதைக் காதால் கேட்டாள். அவளுடைய தவத்தை மகிழ்ந்த அவளுடைய பிரபு மனித உரு எடுத்து கஜினி அமீருடைய செருக்கொழிக்க வந்து நிற்கிறார். அவள் மனம் இப்படிச் சுற்றிக்கொண்டிருக்கும் போதே அவள் மெல்லிய விரல்களும் உடை மாற்றுவதில் ஈடுபட்டுக்கொண்டிருந்தன. உடை மாற்றி முடிந்தது. ஆனால் அவள் கால்கள் எழ மறுத்தன.

கங்கா தேவி "சௌளா, வா பெண்ணே" என்றழைத்தாள்.

சௌளா தைரியத்தை வருவித்துக்கொண்டு அங்கே நின்றாள். இப்பொழுது கண்கள் மேல் எழ மறுத்து நின்றன.

"வாடி அசடு!'' என்றாள் மீண்டும் கங்கா.

அவள் வந்தாள், அமுதச் சங்கீத ஒளி பரவ—அப்ஸர குமாரி போல் அழகுக் கண் அம்புகளால் பீமதேவனைத் துடிக்கவைத்துக் கொண்டு—வெட்கத்தின் சேஷ்டைகளால் அவர் தாகம் அதிகரிக்க அவள் சிலம்புகள் ஒலித்தன. அப்படியே கால்கள் மின்னின. அவள் அவர் காலிலே விழுந்து பாததூளியை எடுத்துச் சிரஸிலே தாரணம் செய்துகொண்டாள்.



"சௌளா நீ அன்று இரவு சொன்னுயே சீக்கிரம் திரும்பி வா! என்று. அதை நான் மறக்கவில்லை!" என்ருர் பீமதேவன். சௌளா குனிந்த தலையின் நீர் சொரியும் கண்களை மேலே தூக்கி, தான் முன்னறிந்து நேசித்த பீமதேவனுடைய அன்பை ஏற்றுக்கொண்டாள்.

"நான் மறக்கவில்லை" என்ருர் மீண்டும் அவர்.

"நீங்கள் கோவிலில் எழுந்தருளியபோது நான்தான் நடனம் ஆடிக்கொண்டிருந்தேன்." சௌளா குரலில் வேதனையுடன் குறையும் கலந்திருந்தது.

"அதுவா, நான்தான் தெரியுமே. நான் உன்னைப் பார்க்கவில்லை. எனக்குத்தான் 'ஒருமதி' யாயிற்றே" என்று சொல்லி, கொஞ்சம் சிரித்து, பீமதேவன் மேலே சொன்னர்.

"அது என்னுடைய பிசகுதான். இனி நீ சற்று நேரம் கடவுளுக்கெதிரே நடனமாடலாம். அதற்கு அனுமதி கொடுக்கிறேன். அதைச் சொல்லிப்போகத்தான் நான் இங்கே வந்தேன்,"

"அந்தக் காளமுகனிடத்திலிருந்து சௌளாவைக் காப்பாற்றித் தந்தீர்களே! அதற்கு நாங்கள் என்ன பிரதி செய்யப்போகிறோம்?"

"சே, அது என் கடமை அல்லவா! பெண், பசு, பிராமணன் மூவரையும் காப்பாற்ற வேண்டியது ஒரு வீரனின் கடமைதானே."

சௌளாவின் கண்கள் கேட்டன: "அந்த முறையில்தான் அதாவது கடமையை எண்ணித்தான் நான் காப்பாற்றப்பட்டேனு?"

பீமதேவன் இதயம் இதைப் படித்துக் கொண்டது. அவர் இதய வீணையில் ஒரு கம்பி துடித்து எழுந்தது. ஆனல் இது காதல்புரியும் நேரமல்ல. எழுந்தார் அவர். "சரி நேரமாய்விட்டது. வேலை இருக்கிறது; வருகிறேன்" என்று கிளம்பினர்.

கங்காவும் எழுந்தாள். "மகாராஜா, பிறகு ஒருமுறை எங்களுக்குத் தரிசனம் தருவீர்களா?" என்று பிரார்த்தித்தாள்.

பீமதேவன் தயங்கினர். இந்த ஊர்வசியைத் தோற்கடிக்கும் அழகின் சக்தியை விட்டு அவர் எப்படிப் போவார்?

"பிரபாசியில் நாளைமுதல் ஒரு பெண்ணும் இருக்கப்போவதில்லை. நீங்கள் இருவர்மட்டும் தான் இருப்பீர்கள். ஆகவே நீங்கள் வந்து கோயிலுக்குள் நாங்கள் இருக்குமிடத்தில்தான் இருக்கவேண்டும். எங்களைப் பார்த்துக் கொள்ளவேண்டும்."



கங்கை இதைக் கேட்டு மிகவும் உவந்தாள். சௌளாவின் ஆனந்தம் ஊமையாகி நின்றது. பீமதேவன் வாக்கை நிறைவேற்ற நல்ல காரணம் கண்டுபிடித்தார்! 'நாளைக் காலையிலேயே உங்கள் வீட்டிற்குப் படைவீரர்கள் தங்க வந்துவிடுவார்கள்' எனறு ஒரு அம்பு விட்டுவிட்டுத் திரும்பினார் வீரர். "இதற்கென்ன இவ்வளவு அவசரமோ?" என்று பதிலம்புவிட்டன சௌளாவின் கண்கள்.

7

சிவராசி மிகவும் களைத்துப்போயிருந்தான். இவ்வளவு நாள் உபவாசமிருந்து இன்றுதான் நிறுத்தினான். அத்துடன் நாம் போவதா இல்லையா என்ற கவலையும் அவனைக்குடைய ஆரம்பித்தது.

நடுப்பகல் வரை பகவானுடைய சேவையும் குருபக்தியும் ஒரு தட்டில்; குருதேவரில்லாது தானே செய்யும் பாசுபத மதப் பிரசாரம், திரிபுரசுந்தரியின் பூஜைக் குறைப் பூர்த்தி, இரண்டும் மற்றொரு தட்டில் இருந்தன. ஆனால் இப்பொழுது சௌளாவின் நினைவு அதிகப் பளுவுள்ளதாக ஆகிவிட்டது. குருதேவர் செய்த பாபம் அவனுக்கெதிரே கோரரூபம் கொண்டு தாண்டவமாடிற்று. அவர் தாம் பாவம் செய்ததுமன்றி அவனையும் அநியாயமாகப் பிரயாச்சித்தம் செய்ய வைத்துவிட்டார். ஆனால் கஜினி ஜயித்து, பிரபாசியைப் பிடித்துக்கொண்டால் பாசுபதமதம்? குருதேவர்தான் அடம்பிடிக்கிறார். தானுமா பிடிப்பது? ஆனால் தான் மட்டும் கம்பாதம போய், சௌளா இங்கேயே தங்கிவிட்டால் என்ன பாபம், அந்தப் பூஜை முடிவுறுதே, அதற்கு என்ன செய்வது? இப்படிப் பின்னி அவிழ்த்து மீண்டும் பின்னியவாறே சிவராசி உள் கோட்டைக்குள் நுழைந்தான். இந்தப் பவித்திரமான இடத்தில் இன்று பக்த கணங்கள் நிற்கவில்லை. படை வீரர்கள் ஆயுதம் தாங்கிக் காவல் புரிந்தனர். அதைக் கண்டு அவனுக்குத் தாளமுடியாத வருத்தம் ஏற்பட்டது. "ஆகா! என் தவம் முடிவுற்று, சௌளாவுக்கும் பூஜை நிறைவேறிவிட்டால் கஜினி அமீர் தானாகவே சாம்பலாகிவிடமாட்டானா?" என்று எண்ணிய அவன், "அந்தப் பூஜையை நிறைவேற்றுவது எங்ஙனம்?" என்று கவலைகொள்ள ஆரம்பித்தான்.

**[தொடரும்]**

Edited & Published by N. R. Ramanujan & Printed by S. Rangaswami at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

